Neethi Nool Series No. 7.

695

AUM

# NANNERI

## With meaning and Author's Life

BY

நன்னெறியுரை

ARIYUR S. SWAMINATHA AIYAR

*Teacher, Setupati High School, Madura,*

*Author of Ulisudi Viruttiyurai*

AND

*Late Secretary, Madura Tamil Sangam.*

FIRST EDITION—1,000 COPIES

PRINTED AT THE TAMIL SANGAM STEAM PRESS

MADURA:

Price per Copy 2 As.] 1904. [Postage Extra 6 Pies.

துறைமங்கலம்

சிவப்பிரகாசசுவாமிகள் அருளிச்செய்த

# நன்னெறி

உரையுடனும் நூலாசிரியர் சரித்திரத்துடனும்



இஃது

ஆத்திசூடி விருத்தியுரை செய்தவரும்
மதுரைத்தமிழ்ச்சங்கம் காரியதரிசியாயிருந்தவரும்,
மதுரை சேதுபதி ஹைஸ்கூல் உபாத்தியாயருமாகிய

## அரியூர் எஸ். சாமிநாதையர்

இயற்றியது

முதற்பதிப்பு—1000 பிரதிகள்



மதுரைத்தமிழ்ச்சங்க முத்திராசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

பிரதி விலை அணா உ.] 1904. [தபாற்கூலி ௩-பை.

# முகவுரை.

தமிழ்நாட்டார் கொண்டாடாநின்ற நீதிநூல்களில் நன்னெறியுமொன்று. இந்நூல் செந்தமிழ்ச் செறிவுடையது. இதன் நூலாசிரியராகிய **சிவப்பிரகாசசுவாமிகள்** ஒரு நாள் தாம் தனித்துக் கடற்கரைக்குப்போயிருந்தபொழுது அதன் மணற்பரப்பில் சொற்பநேரத்தில் இதன் நாற்பது வெண்பாக்களையும் எழுதியதாகவும் வீடு வந்து சேர்ந்தபின்னர்த் தம் தம்பி கருணைப்பிரகாசரை நோக்கி அவ்வெண்பாக்களை எழுதி வரும்படி கட்டளையிட்டதாகவும் அவரது சரித்திரத்தால் விளங்குகின்றது. இதன் கற்பனைகள் சுபாவமாகவும் கம்பீரமாகவும் இருக்கும். இதன் கண் உள்ள நாற்பது பாடல்களில் நான்கில் ஒருபங்கு கடலையே உபமானமாக உடையன. நம்மைச்சுற்றியிருக்கும் சாதாரணப்பொருள்களையே மிகவும் அற்புத உபமானமாகச்செய்திருக்கின்றனர். "**கண்ணிரண்டு மொன்றையேகாண்**" என்ற ஓர் உபமானமே ஒப்புயர்வற்றதெனலாம். இந்நூலாசிரியர் சிவபக்தராகையால் சிவபுராணக் கதைகளைச் சிற்சில செய்யுள்களில் உபமானமாக எடுத்துக் காட்டியிருக்கின்றனர்.

இதற்கு யான் உரையெழுதுங்கால் மகாவித்வான் சரவணப்பெருமாளையர் அவர்கள் எழுதிய பழைய உரை மிகப் பயன்பட்டது. இதன்கண் குற்றங்குறைகள் காண்பாராயின் அவற்றைப்பொறுத்தருளுதல் கற்றோர்கடனும்.

சேதுபதி ஹைஸ்கூல்,
மதுரை.
10—3—04.

இங்ஙனம்,
எஸ். சாமிநாதையர்.

# * சிவப்பிரகாச சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்.

"நகரேஷு காஞ்சி" என்று புகழப்படாநின்ற காஞ்சீபுரத்தில் ஏறக்குறைய இருநூற்றுத் தொண்ணூறு வருஷங்களுக்குமுன் தொண்டைமண்டல வேளாளர்க்குத் தீக்ஷாகுருவாகக் குமாரசுவாமி தேசிகர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்குத் திருவண்ணுமலை என்னும் திவ்வியக்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கும் அண்ணுமலையார் அநுக்கிரகத்தால் மூன்றுபுத்திரரும் ஒருபுத்திரியும் பிறந்தார்கள். அவர்களுக்கு முறையே சிவப்பிரகாசம், வேலாயுதம் கருணைப் பிரகாசம், ஞானம்பிகை என்று பெயரிட்டனர். தந்தையார் சிவலோகம் சேரவே சிவப்பிரகாசர் தமது சகோதரர் முதலியவர்களோடு திருவண்ணுமலைக்குப் போய்ச் சிலநாள் வாசஞ்செய்து கல்வி முயற்சியில் தளராது வாழ்ந்துவருநாள்களுள் ஒருநாள் அந்தச் சோணசைலத்தைப் பிரதக்ஷிணஞ்செய்துவரும்போதே நூறு செய்யுள்களால் அம்மலையைத்தோத்திரம் பண்ணினுர். அந்நூல் சோணசைலமாலை எனப்படும். பின்னும் பேரிலக்கணங்களைப் பெரிதுகற்க விரும்பித்தமது சகோதரர்களுடனே தென்தேசத்திற்குப் பிரயாணமுற்று திரிசிரபுரத்துக்கு வடக்கே 15-மைல் தூரத்தில் சென்னை ரஸ்தாவில் உள்ள வாலிகண்டபுரத்திற்குத் தென்பாகத்திலுள்ள துறைமங்க

---

* சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத்திரட்டின் கண்ணுள்ள வரலாற்றை ஆதாரமாகக்கொண்டு எழுதலானேன்.

லம் என்னும் நகரத்தைச் சார்ந்த ஒரு நந்தனவனத்தில் சிவ பூஜை செய்துகொண்டிருந்தனர். அக்காலத்தில் அக்கிரா மாதிபதியும் சிவபக்தருமான அண்ணாமலை ரெட்டியார் சிவப்பிரகாசரது வரவைக் கேள்வியுற்று அங்கு அடைந்து அளவளாவி அவரை அவ்வூரிலேயே சிலகாலம் வாசம்பண் ணப் பிரார்த்தித்தனர். அவரும் அதற்கிணங்கி இரண்டு வருஷகாலம் அவருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக் கொண்டு வந்தனர். அதன் பின்னர் தாம் கொண்ட கருத்தை நிறைவேற்ற விரும்பித் தென் தேசத்துக்குச் செல்லல் வேண்டுமென்பதை அவருக்கு அறிவிக்க அவரும் 300-பொன் உதவினர். அது கொண்டு சிவப்பிரகாசர் திருநெல்வேலியை யடைந்து தாமிரபரணிநதி தீரத்திலிருக்கின்ற சிந்துபூந்துறையில் தருமபுர ஆதினத்து வெள்ளியம்பல வாண சுவாமிகள் இலக்கிய இலக்கணங்களில் அதிக வல்லவர்களாயிருக்கிறார்கள் என்பதைக் கேள்வியுற்று அவ்விடத்திற் சென்று அவரைக்கண்டுதாம் இலக்கணங் கற்க வேண்டி வந்தமையைத் தெரிவித்துக் கொண்டனர். அவர் இவரது இலக்கியப் பயிற்சியை அறிதற்பொருட்டு 'கு' என்பதை முதலில் கொண்டு 'ஊருடையான்' என்பதை இடைப்பெய்து 'கு' என்பதையே ஈற்றிலும் கொண்டு முடியும்படி "ஒருவெண் பாட்பாடுக" என்று கூற நம் சிவப்பிரகாசரும்:—

"குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
முடக்கோடு முன்ன மணிவாற்கு—வடக்கோடு [ள்ள
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொ
ளூருடையா னென்னு முலகு." என்னும்

வெண்பாவைப் பாடினர். அம்பலவாணர் இதனை வியந்து பாராட்டி அவரைத்தழுவித் தம் அருகிருத்தி அவரது சகோதரர்கள் இருவருக்கும் ஒருபக்ஷத்துள் பஞ்சலக்ஷணங் களையும் பாடஞ்சொல்லி முடித்தனர். உடனே நம்சிவப்பிர காசர் தாம் அண்ணாமலை ரெட்டியாரிடம் பெற்ற முந்நூறு பொன்னையும் குருதக்ஷிணையாக சமர்ப்பிக்க அம்பலவாண ரும் இது நமக்கு வேண்டுவதில்லை. நமமைத் தூஷித்தலையே இயல்பாகக்கொண்டு திருச்செந்தூரில் வசிக்கும் தமிழ்ப்புல வரொருவரை வெற்றி கொண்டு அவர் வந்து நம்மை வணங் கும்படி செய்தலே குருதக்ஷிணையாகுமென்று மறுத்தனர். அவ்வாறே சிவப்பிரகாசர் திருச்செந்தூர் சென்று அப்புலவரைச் சந்தித்து இருவரும் சபதங்கூறிக்கொ ண்டு முருககடவுள்மீது நிரோட்டகயமகஅந்தாதி (உதடு ஒட் டாத எழுத்துகள் அமைத்துப் பாடுவது) பாடத் தொடங் கினர். நம்சிவப்பிரகாசர் 30-கட்டளைக் கலித்துறை முடிக்க அப்புலவா ஒருசெய்யுளேனும் பாடமுடிய வில்லையாதலால் அவருககு அடிமைப் பட்டனா. உடனே சிவப்பிரகாசர் அவரை இட்டுக்கொண்டுபோய் குருவின சந்நிதானத்தில் வணஙகச் செய்தனர். அவரும் அகமகிழ்ந்து நம்சிவப்பிர காசரைப் பாராட்டிச் சிதம்பர க்ஷேத்திரத்தில் சிலகாலம் வசிக்க விடை கொடுத்தனுப்பினர். அவ்வாறே செய்தபின் துறைமஙகலத்தைச் சார்ந்து அண்ணாமலை ரெட்டியாரைக் கண்டு அவரது வேண்டு கோளின்படி வாலிகண்டபுரத்தின் வடமேற்பாகத்திலுள்ள திருவெஙகை மாநகரத்திலே தம் பொருட்டு அவரால் கட்டப்பட்ட மடத்தில் சிலகாலம் வீற்

திருந்து சிவப்பிரகாச விகாசம், தருக்கபரிபாஷை, சதமணி மாலை, நால்வர் நான்மணிமாலை என்னும் நூல்களைச்செய்த னர். பின் ஸ்தலயாத்திரை புறப்பட்டுப்பல சிவஸ்தலங்க ளைத் தரிசனம் செய்து பூதலூருக்கு 6-மைல் வடக்கே காவி ரியாற்றின் கரையிலுள்ள திருக்காட்டுப்பள்ளி என்னும் திவ் விய க்ஷேத்திரத்தையடைந்து சிலநாள் வாசஞ் செய்தனர். ஒரு நாள் அவ்வூர் வீதியினிடத்தே கல்வியிற் சிறந்த ஒரு பெண் உப்புவிற்றலைக்கண்டு இரக்கமுற்றுத் திருநோக்க தீக்ஷை செய்து அவளுடைய புலமையைப் பிறர்க்கு அறி விக்கக்கருதி,

"நிறைய வுளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக்கணிந்த பெம்மா—னுறையுந்
திருக்காட்டுப் பள்ளி திரிபாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி யெமக்கு"

என்னும் வெண்பாவைப் பாடினமாத்திரத்தில் அப்பெண்:—

"தென்னேநங்கு தில்லைசிவப்பிரகாசப்பெருமான்
பொன்னேநங்கு சேவடியைப் போற்றினேன்—மன்னேன்
றிருக்கூட்ட மத்தனைக்குந் தெண்டனிட்டோந் தீராக்
கருக்கூட்டம் போக்கினேங் காண்",

என்னும் வெண்பாவைப் பாடிக் கொண்டு வந்து நமஸ்கரி த்து எழுந்து கைகூப்பி நிற்கவே அப்பெண்ணுக்கு மெய்ஞ் ஞானம் உண்டாகும் வண்ணம் கடாக்ஷித்தனர்.

சிலகாலம் சென்ற பின் காஞ்சீபுரமடைந்து வசிக்குங் கால் நிஜகுண யோகி என்பவரால் கன்னட பாஷையிற் செய்யப்பட்டிருந்த விவேகசிந்தாமணியின் ஒருபாகமாகிய

வேதாந்த பரிச்சேதத்துக்கு வேதாந்த சூடாமணி யெனப் பெயர் தந்து அதனையும் இரேணுக ரென்னுங் கணத்தலைவரால் அகஸ்தியமகாமுனிக்கு உபதேசிக்கப்பட்ட சித்தாந்த சிகாமணியையும் பிரபு தேவர் சரித்திரமாகிய பிரபு லிங்க லீலை யையும் தமிழிற் பாடினர். பின் கூவம் என்னும் ஸ்தலத்தை அடைந்து அங்குள்ள வேளாளர் முதலியோர் வேண்டுகோளின்படி புராணம் பாடி அரங்கேற்றினர்.

பின் விருத்த கிரியையடைந்து பழமலையந்தாதி, பிக்ஷாடனநவமணிமாலை, கோச்சகக்கலிப்பா, பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை, பெரிய நாயகி யம்மை நெடுங்கழி நெடிலாசிரிய விருத்தம் என்னும் பிரபந்தங்களைப்பாடி முடித்தனர்.

ஒருநாள் மணிமுத்த நதியிலே ஸ்நானம் செய்து வரும் போது அதனருகிருந்த மாஞ்சோலையின் புறத்து விழுந்து கிடந்த மாங்கனியைக் கண்டு இது சிவலிங்கப்பெருமானுக்கு நைவேத்தியத்திற்கு உபகரணமாகு மென்று கருதி யெடுக்க அதுகண்ட அச்சோலைக்காவலாளன் இவர் மகிமை யறியாது மடிபிடித்திழுத்து மனம்வருந்தச் செய்தனன். சிவப்பிரகாசர் அச்சிவாபராதியைத் தண்டித்துச் சுத்தனுக்கத் திருவுளங் கொண்டு:

"அடுத்துவருந் தொண்டனுக்கா வந்தகனைத் தாளா
லடர்த்ததுவுஞ் சத்தியமே யாகு—லெடுத்ததொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்"

என்னும் வெண்பாவைப் பாடிச சூரியன் உதயமானவுடன உயிர்துறககும்படி செய்து நற்கதியில் சேர்த்தருளினர்.

ஒருநாள் தனிமையாய்ச் சமுத்திரத்தை யடைந்து அங்குள்ள நறுமணற் பரப்பிலே தாமெழுதிய நன்னெறி வெண்பா நாற்பதையும் எழுதிவரும் படி தம்பின்னோராகிய கருணைப் பிரகாசருக்குக் கட்டளையிட்டு ஞானசாரியரிடத்தே விடைபெற்றுக்கொண்டு திருப்பதிகம் பெற்ற திவ்விய ஸ்தலஙகள் தோறும் யாத்திரை புரிநது வநதனர். அக்காலத்திலே அகராதி செய்த வீரமாமுனிவரென்பவர் (இவர் தான் பெஸ்கி என்ற பெயருடைய பாதிரியார்' இவர் திரிசிரபுரத்தில் சண்டாசாகிப்புக்குசசில்காலம் மந்திரியாயிருநதவர். தேம்பாவணி, தொன்னூல்விளக்கம் என்ற இலககிய இலக்கணஙகளை இயற்றியவா) எதிரப்பட்டு இயேசுமதமாகிய தஙகொள்கையை நாட்டுதற்பொருட்டுத் தருக்கஞ்செயய உடனே அக்கொள்கையை மறுத்து இயேசுமத நிராகரணமெனப் பெயரிய ஓர் நூலைச செயது ஒவ்வொரு ஸதலத்தையும் இவ்விரண்டு வெண்பாக்களால் தோத்திரம் செயது முடித்து நல்லொற்றூரையடைநது அஙகுள்ள மடத்தில் வீற்றிருநதார்.

இவா தம்பி கருணைப்பிரகாசர் சீகாளத்தி புராணத்தைப் பாடததொடஙகி சீகாளத்தி சருக்கம் வரையும் தமிழில் மொழிபெயாத் தருளின சமயத்தில் சிவபதவியை யடைநதாா. அதனையறிநத நம்சிவப்பிரகாசர் தம் சகோதரா பாதியில் விட்டுப்போன புராணத்தை முடிக்கக்கருதி கண்ணப்பசசருக்கம், நக்கீரச்சருக்கம் என்ற இரண்டு சருக்கங்களையும் செய்து சிலகாலம் வாழ்ந்திருநது 32-ம் வயதில் புரட்

டாசி ஸ்ரீ பௌர்ணமி திதியில் சிவசாயுஜ்யத்தையடைந்தனர். அதையறிந்த இவரது தம்பியாகிய வேலாயுதர்:—

“அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்”

என்னும் வெண்பாவைப்பாடி ஆற்றொணுத்துயரில் மூழ்கி சிவப்பிரகாசரது சமாதி தரிசனம்பண்ணி நல்லூராப் புராண முதலிய எழுநூல்களையியற்றித் தம் சகோதரர்களால் பாடப் பட்டு முடிவடையாமலிருந்த சீகாளத்தி புராணத்தை முடித் துச சில்காலம் வாழ்ந்து பெருமதநூா மடத்தில் சிவபதவி யடைந்தனர்.

சிவப்பிரகாசர் ஒருநாள் தம் ஞானசிரியரோடு அளவ ளாவிக்கொண்டு இன்புறும் பொழுது தம எதிரெழுந்த சந் திரோதயததைக் கண்டுகளித்து

“கடன்முரச மார்ப்பக் கதிரககயிற்று லேறி
யடைமதி விண்கழைநின் றாடக—கொடைமருவு
மெங்கள் சிவஞான வேந்த லிறைத்தமணி
தங்கியவே தாரகைக டாம்”

என்ற அழகான வெண்பாவைப் பாடினர்.

நன்னெறி இவ்விதமான அழகான வெண்பாக்களோடு கூடியது. அதன்கண் உபயோகித்திருக்கும் கற்பனைகள் சுபா வமாகவும் கம்பீரமாகவும் இருக்கும்.

“கண்ணிரண்டும் ஒன்றையே காண்” என்று முடிகிற ஒரு வெண்பாவின் அழகே ஒப்புயர்வற்றதெனலாம்.

## சிவப்பிரகாசர் இயற்றிய நூல்கள்.

1. சோணசைலமாலை.
2. திருச்செந்திலந்தாதி.
3. திருவெங்கைக்கோவை.
4. திருவெங்கைக்கலம்பகம்.
5. திருவெங்கையலங்காரம்.
6. திருவெங்கையுலா.
7. சிவப்பிரகாசவிகாசம்.
8. தருக்கபரிபாஷை.
9. சதமணிமாலை.
10. நால்வர் நான்மணிமாலை.
11. சிவஞானபாலையதேசிகர்தாலாட்டு.
12. ஷெடியார் நெஞ்சுவிடு தூது.
13. ஷெடியார் திருப்பள்ளியெழுச்சி.
14. ஷெடியார் பிள்ளைத்தமிழ்.
15. ஷெடியார் கலம்பகம்.
16. ஷெடியார் அதிசயப்பத்து.
17. வேதாந்த சூடாமணி.
18. சித்தாந்த சிகாமணி.
19. பிரபுலிங்கலீலை.
20. திருக்கூவப்புராணம்.
21. பழமலையந்தாதி.
22. பிக்ஷாடனநவமணிமாலை.
23. பழமலைக்கொச்சகக்கலிப்பா.
24. பெரியநாயகியம்மை கட்டளைக்கலித்துறை.

25. ஷெ விருத்தம்.
26. நன்னெறி.
27. இயேசுமதநிராகரணம்.
28. க்ஷேத்திரவெண்பா.
29. சீகாளத்திபுராணம் (உ. சருக்கம்.)
30. சிவநாமமகிமை.
31. இஷ்டலிங்க அபிஷேகமாலை.
32. ஷெ நெடுங்கழிநெடில்.
33. ஷெ குறுங்கழிநெடில்.
34. ஷெ நிரஞ்சனமாலை.
35. ஷெ கைத்தலமாலை.

---

# தோத்திரப்பாக்கள்.

---

## விநாயகர்துதி.

1. முன்னவனே யானை முகத்தவனே முத்திநலஞ்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே—மன்ன
வனே, சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேக
ரனே, தற்பரனே நின்றாள் சரண்.

(பொ-ள்) தூய் - பரிசுத்தமான; சிற்பரன் - கடவுள்; ஐங்கரன் - அழகியகையையுடையவன் (விநாயகன்); சேகரம்- தலை, முடி; தற்பரன் - கடவுள்; நின்றாள்-நின்பாதம்; சரண் - அடைக்கலம்.

## கலைமகள்துதி.

2. தாவறு முலகெலாந் தந்த நான்முகத
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதொ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம்.

(பொ-ள்) குற்றம்நீங்கிய உலகங்களையெல்லாம் படைத்த பிரம்மாவின் மனைவியாகி சகல உயிர்களின் நாவுதோறு இருந்திடும் நன்மைகளையுடைய சரஸ்வதியினது மலர்ப்பதத்தைச் சிரசின்மேல்வைத்துத் துதிசெய்வோம்.

## திருமால்துதி.

3\. தேருங்கால தேவ னொருவனே யென் றுரைப்பார்
ஆரு மறியா ரவன்பெருமை—ஒரும்
பொருள்முடிவு மித்தனையே யெத்தவஞ் செய்தார்
அருள்முடிவ தாழியான் பால். [க்கும்

(பொ-ள்) தேருங்கால் - ஆராயுங்கால்; ஓரும் - ஆராயுந் தறியும்; அருள்முடிவதாழியான்பால் - அருள்முடிவதானது சுதர்சனம் என்னும் சக்கரத்தையுடைய மகாவிஷ்ணுவினிடத்தில்.

4\. தேசுந் திறலுந் திருவு முருவமும
பாசில குடிப்பிறப்பும மற்றவையும்—பேசில்
வலம்புரிந்த வான்சங்கம் கொண்டான்பே ரோத
நலம்புரிந்து சென் றடையும் நன்கு.

(பொ-ள்) வலப்பக்கம் சுழித்திருக்கப்பட்ட பாஞ்சசந்நியம் என்றபெரிய சங்கத்தைக்கையில் தரித்திருப்பவனாகிய ஸ்ரீமந்-நாராயணனுடைய திருநாமத்தை நாவினால் சொல்ல கீர்த்தியும் சகல சாமர்த்தியமும் ஐசுவரியமும் அழகியஉருவும் குற்றமற்ற நல்ல குடியிற்பிறத்தலும் மற்றைப்போக போக்கியங்களும் நன்மையைச்செய்து ஒருவனைத் தாமாகவே சிறப்புற வந்து அடையும்.

## பரமசிவன்துதி.

5\. ஐய னேயுனை யன்றி யொருதெய்வங்
கையி னாற்றொழ வுங்கரு தேன்கண்டாய்
பொய்ய னாகிலும் பொய்யுரை யேன்சுத்த
மெய்ய னாமுனக் கேவெளி யாகுமே.

(பொ-ள்) கையினாற் றொழவுங் கருதேன் கண்டாய் - கையினால் தொழவும் நினையேன் கண்டாய்; சுத்தமெய்யனாம் உனக்கு - சுத்தமெய்யே வடிவமாகிய உனக்கு.

6\. கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப், பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப்பல் பச்சிலையா, லெண்ணுண்டு சாத்த வெதிர்நிற்க வீசனிருக்கையிலே, மண்ணுண்டு போகுதையோ கெடுவீரிந்தமானுடமே.

(பொ-ள்) எண்ணுண்டு சாத்த - அருச்சிக்க சஹஸ்ரநாமம் உண்டு, (எண் - கணக்கு); மண்ணுண்டு போகுதையோ கெடுவீர்இந்தமானுடமே - இந்தமனிததேகம் மண்ணால்உண்ணப்பட்டுக்கழிகின்றது (மேற்கூறிய செயல்களைச்செய்யாமல்); ஐயோகெடுகின்றீர்.

7\. கண்ணுள் நின்ற ஒளியைக் கருத்தினை
விண்ணுள் நின்ற விளங்கிய மெய்யினை
யெண்ணி யெண்ணி இரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்தொழுந் தெய்வமே.

(பொ - ள்) விண் - ஆகாயம்; மெய்யினை - உண்மைப் பொருளை; நண்ணுகின்றவர் - சேரப்பட்டவர். இச்செய்யுளால் அடியார் வணக்கம் கூறுகின்றார்.

8. வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சுந்
தாழ்க்கச் சென்னியுந் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே.

(பொ-ள்) தாழ்க்கச்சென்னியும் - வணக்கம்செய்யத்தலையும்; சூழ்த்தமாமலர் - தம்மைச்சூழ்ந்திருக்கப்பட்ட பெருமைதங்கிய புஷ்பங்களை அல்லது ஆராய்ந்தெடுக்கப்பட்டமாமலரையும்; வீழ்த்தவா - விழும்படி செய்யவா ?

9. பற்பல் காலம் பயிற்றிப் பரமனைச்
சொற்பல் காலநின் றேத்துமின் தொல்வினை
வெற்பில் தோன்றிய வெங்கதிர் கண்டஅப்
புற்ப னிக்கெடு மாறது போலுமே.

(பொ-ள்) தொல்வினை - பழையவினைகள்; வெற்பில் தோன்றிய - மலையில் தோன்றிய; வெங்கதிர் கண்ட அப்புற்பனிகெடுமாறதுபோலுமே - சூரியனைக் கண்ட புல் நுனியிலுள்ளபனி அழிந்துபோவதுபோல அழியும்

10. கரும்பினும் இனியான் தன்னைக் காய்கதிர்ச் சோதியானை, இருங்கடல் அமுதந்தன்னை இறப்பொடு பிறப்பிலானைப், பெரும்பொருள் கிளவியானைப் பெருந்தவமுனிவரேத்தும், அரும்பொனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்தவாறே.

(பொ-ள்) காய்கதிர்ச்சோதியான் - கிரணங்களைவீசுகின்ற சோதியையுடையவனை; இருங்கடல் - பெரியகடல்; கிளவி - சொல்; அழகிதா நினைந்தவாறே - நினைந்தவிதம் அழகிதாம்.

11. வான நாயக வானவர்நாயக வளங்கூர்
ஞான நாயக நான்மறை நாயக நலஞ்சேர்
மோன நாயக நின்னடிக் கன்பினைறிமுற்றுந
தீனனுய்அகம வாடவோ என்செய்வேன் செபபாய்.

(பொ-ள்) வளஙகூா - வளமிகுந்த; தீனன் - எளியோன் அகம் - மனம்; செப்பாய - சொல்லுவாய.

## வாழ்த்து.

12. வாழ்கஅநதணர், வானவா், ஆனினம்;
வீழ்கதண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்கதீயதெலலாம; அரன்நாமமே
சூழ்க; வையகமும துயர் தீர்கவே.

(பொ-ள்) வானவா - தேவா்; ஆனினம் - பசுக்கூட்டம் தண்புனல் - குளிரசசிபொருந்தியஜலம் அதாவதுமழை; ஆழ்க தீயதெல்லாம் - கேடுள்ளவையெல்லாம் அழியக்கடவன; அர ன் - பரமசிவனுடைய; வையகமும் - பூமியும்; துயர்தீர்கவே - துன்பம் ஒழியக்கடவது.

துறைமங்கலம்,

# சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# நன்னெறி.

மூலமும் உரையும்.

## காப்பு.

மின்னெறி சடாமுடி விநாயக னடிதொழ
நன்னெறி வெண்பா நாற்பதும வருமே.

| பதம். | பொருள். |
|---|---|
| மின் | மின்னொளியை |
| எறி | வீசுகின்ற |
| சடாமுடி | சடாமுடியையுடைய |
| விநாயகன் | விநாயகமூர்த்தியினுடைய |
| அடிதொழ | பாதங்களைத் தொழுதால் |
| நன்னெறி | நன்னெறி யென்னும் இந்நூலி லுள்ள |
| வெண்பா நாற்பதும் | நாற்பது வெண்பாவும் |
| வரும் | வரும் |

ஏ-ஈற்றசை; நன்னெறி=நல் ! நெறி; நன்மையாகிய வழி; பண்புத் தொகை.

(கருத்துரை) விநாயகர் அடி வணக்கஞ்செய்யின் நன்னெறி என்னும் நூல் இடையூறின்றி இனிது முடியும்.

1. என்று முகம னியம்பா தவர்கண்ணும்
சென்று பொருள்கொடுப்பர் தீதற்றோர்—துன்று
பூவிற் பொலிகுழலாய் பூங்கை புகழுமோ [சுவை
நாவிற் குதவு நயந்து.

| பதம். | பொருள். |
|---|---|
| பூவில்பொலி | பூவினால் பிரகாசிக்கின்ற |
| குழலாய் | கூந்தலையுடையவளே |
| | அழகிய கையானது |
| புகழுமோ | (தன்னைப்) புகழுமோ |
| துன்றுசுவை | (தனக்குக்) கிடைத்த மதுரமாகிய உணவை |
| நாவிற்கு நயந்து | நாவினுக்கு விரும்பி |
| உதவும் | (கொண்டுபோய்) கொடுக்கும் (புகழ்தற்கன்று). |

(அதுபோல)

| | |
|---|---|
| என்றும் | எப்போதும் |
| முகமன் | முகஸ்துதியான மொழிகளை |
| இயம்பாதவர்கண்ணும் | சொல்லாதவரிடத்தும் |
| தீது அற்றோர் | குற்றமற்றவராகிய பெரியோர் |
| சென்று | தாமே தேடிப் போய் |
| பொருள் | தமக்குக்கிடைத்த பொருளை |
| கொடுப்பர் | கொடுப்பார். |

(க-ரை) பெரியோர் முகஸ்துதியான வார்த்தை விரும்பாமல் தாமே தேடிப்போய் பொருள் கொடுப்பர். (இதனால் உத்தமதானம் செய்யுமுறை சொல்லப்பட்டது).

2. மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற வின்சொல் பிறிதென்க—ஈசற்கு
நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு.

| பதம். | பொருள். |
| --- | --- |
| நன்னுதால் | நல்ல நெற்றியையுடையவளே |
| மாசு அற்ற | குற்றந்தீர்ந்த |
| நெஞ்சுஉடையார் | மனத்தையுடையவரது |
| வன்சொல் | கடினமாகிய சொல் |
| இனிது | இனியதாகும். |
| ஏனையவர் | குற்றம்பொருந்திய மனத்தையுடைய பிறர் |
| பேசுற்ற | சொல்லிய |
| இன்சொல் | இனிய சொல்லும் |
| பிறிதுஎன்க | இனியதாயிராது என்று அறிவாயாக. |

(எவ்வாறென்றால்)

| | |
| --- | --- |
| ஈசற்கு | பரமசிவனுக்கு |
| விருப்பு | விருப்பத்தைக் கொடுத்தது |
| நல்லோன் | நற்குணமுள்ளவராகிய சாக்கிய நாயனார் |
| எறிசிலையோ ? | (அன்போடு) எறிந்த கல்லோ (அல்லது) |
| கருப்புவில்லோன் | கரும்புவில்லையுடைய மன்மதன் அன்பின்றி எறிந்த |
| ஒள் மலரோ? | ஒளிபொருந்திய புஷ்பபாணமோ நீ சொல். |

(க-ரை) நல்லோர் கடுஞ்சொல் இன்பமும் தீயோர் இன்சொல் துன்பமும் தரும்.

3. தங்கட் குதவிலர்கைத் தாமொன்று கொள்ளினவர்
தங்கட் குரியவராற் றாங்கொள்க—தங்கநெடுங்
குன்றினாற் செய்தனைய கொங்கையா யாவின்பால்
கன்றினாற் கொள்ப கறந்து.

| பதம். | பொருள். |
|---|---|
| தங்கநெடுங் குன்றினால் | நெடிய தங்க மலையினாலே |
| செய்தனைய | செய்ததைப்போல விளங்குகின்ற |
| கொங்கையாய | தனங்களையுடையவளே |
| ஆவின்பால் | பசுவின் பாலை |
| கன்றினால் | அதன் கன்றைக்கொண்டு |
| கறந்துகொள்ப | கறந்துகொள்வார். |
| (அதுபோல்) | |
| தங்கட்கு | தங்களுக்கு |
| உதவிலர் கை | கொடாதவர் கையிலிருந்து |
| தாம் ஒன்று | தாம் ஒரு பொருளை |
| கொள்ளின் | பெற நினைக்கின் |
| அவர் தங்கட்கு | அவர்க்கு |
| உரியவரால் | நண்பரால் |
| தாம் கொள்க | தாம் பெறக்கடவர் (அவ்வொன்றை) |

(க-ரை) கொடாதவரிடத்தில் ஒரு பொருளைப் பெற வேண்டின் அவர் சிநேகிதரால் அதனைப் பெறக்கடவர்.

4. பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடனீர் சென்று புயன்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு.

| பதம். | பொருள். |
| --- | --- |
| பிறர்க்கு உதவி | பிறருக்கு உபகாரம் |
| செய்யா | செய்யாத |
| கருங்கடல்நீா | கரிய சமுத்திரத்திலுள்ள நீரை |
| புயல் சென்று | மேகமானது போய் |
| முகந்து | மொண்டு வந்து |
| பிறர்க்கு | பிறருக்கு (உலகத்தவர்க்கு) |
| பெய்யாக் கொடுக்கும் | பெய்து கொடுக்கும். |
| (அதுபோல) | |
| பிறர்க்கு உதவி | பிறருக்கு உபகாரம் |
| செய்யார் | செய்யாதவருடைய |
| பெருஞ் செல்வம் | பெரிய செல்வமானது |
| வேறு | வேறு (அப்படியிருக்கினும் அது) |
| பிறர்க்கு உதவி | அயலாருக்கு உதவி |
| ஆக்குபவர் | செய்பவரது |
| பேறும் | செல்வமாகும். |

(தெளிவுரை) மேகம் பெய்வது கடல் நீராயிருந்தும் அம்மேகத்து நீராகவே கொள்ளப்படுதல் போல ஒருவர் உதவுவது பிறர் பொருளாயிருந்ததாயினும் அவ்வுதவுவோர் பொருளாகவே கொள்ளப்படும்.

5. நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலு
நோக்கி னவர்பெருமை நொய்தாகும—பூக்குழலாய்
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோற்
புல்லினுந திண்மைநிலை போம்.

| பதம். | பொருள். |
|---|---|
| பூ | மலர்களை (முடித்த) |
| குழலாய் | கூந்தலையுடையவளே! |
| நெல்லின் | நெல்லிலிருந்து |
| உமி | உமியானது |
| சிறிது நீங்கி | சிறிது விலகி |
| பழமைபோல் | முன்போலவே |
| புல்லினும் | கூடினாலும் |
| திண்மைநிலை | அதற்குமுன் முளைத்தெழுதற்குக் காரணமாக அந்நெல்லிலிருந்த வலிமைநிலையானது |
| போம் | கெட்டுப்போம். |

(அதுபோல)

| | |
|---|---|
| நீக்கம் அறும் | பிரிவு இல்லாத |
| இருவர் | (சிநேகிதர்) இருவர் |
| நீங்கி | (பகைத்துப்) பிரிந்து |
| புணர்ந்தாலும் | (முன்போலவே) கூடினாலும் |
| நோக்கின் | (ஆராய்ந்து) பார்க்குமிடத்து |
| அவர் பெருமை | அச்சிநேகிதரின் பெருமை |
| நொய்தாகும் | குறைவுபடும். |

(க-ரை) பிரிந்துகூடுஞ் சிநேகம் பழைய வலிமையை யடையாது (ஆகையால் நட்பில் பிழை பொறுக்கவேண்டும் என்பதாம்).

6. காதன் மனையாளுங் காதலனு மாறின்றித்
தீதி லொருகருமஞ் செய்பவே—யோதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கறுன் [
கண்ணிரண்டு மொன்றையே காண்.

| பதம். | பொருள். |
|---|---|
| ஓது | புகழப்பட்ட |
| கலை எண்ணிரண்டும் | பதினாறுகலைகளும் |
| ஒன்றும் | பொருந்திய |
| மதியென் | சந்திரன் என்று சொல்லப்பட்ட [ |
| முகத்தாய் | முகத்தையுடையவளே! |
| கண்ணிரண்டும் | இரண்டுகண்களும் |
| ஒன்றையே | ஒருபொருளையே |
| நோக்கல் | (ஒன்றுக்கொன்று மாறுபாடு இல்லாமல் ஒத்துப்) பார்த்தலை |
| காண் | நீ பார். |

(அதுபோல)

| | |
|---|---|
| காதன்மனையாளும் | அன்புள்ள மனைவியும் |
| காதலனும் | நாயகனும் |
| மாறு இன்றி | (தம்முள் யாதொரு) மாறுபாடும் இல்லாமல் |
| தீது இல் | குற்றமில்லாத |
| ஒரு கருமம் | ஒரு தொழிலை |
| செய்ப | செய்வர். |

(க-ரை) அன்புள்ள நாயகனும் நாயகியும் மனம் ஒரு ஒருமித்தே தருமத்தைச் செய்வார்கள்.

7. கடலே யனையம்யாங் கல்வியா லென்னு
மடலே றனையசெருக் காழ்த்தி—விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும
பனிககடலு முண்ணப் படும்.

| பதம். | பொருள். |
|---|---|
| முழங்கும் | ஒலிக்கின்ற |
| பனிக்கடலும் | குளிர்ந்த கடலும் |
| முனிக்கரசு | முனிவர்களுக்குத் தலைவராகிய அகஸ்திய முனிவரது |
| கையால் | கையினால் |
| முகந்து உண்ணப்படும் | மொண்டு பருகப்பட்டது. |

(அதுபோலப் புலவர்களே ஒரு சிறுவனும் உங்களை ஒரு சிறிய சொல்லைக்கொண்டு வெல்வான். ஆதலால்)

| | |
|---|---|
| யாம் கல்வியால் | நாம் கல்வி நிறைவால் |
| கடல் அனையம் | கடலுக்கு ஒப்பாயிருக்கின்றோம் |
| என்னும் | என்கின்ற |
| அடல் | வலிமையையுடைய |
| ஏறு அனைய | ஆண்சிங்கத்தின் (கர்வம்) ஒத்த |
| செருக்கு | கர்வத்தில் |
| ஆழ்த்திவிடல் | (உங்களை) அமிழ்த்திவிடாதிருங்கள். |

ஏ, உம் அசை

(க-ரை) புலவர்களே நீங்கள் கல்விசெருக்குக்கொண்டு அழியாதீர்கள்.

8. உள்ளங் கவர்ந்தெழுந் தோங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க—வெள்ளந
தடுத்த லரிதோ தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ விளம்பு.

| பதம். | பொருள். |
|---|---|
| வெள்ளம் | (பெருகிவருகிற)வெள்ளத்தை |
| தடுத்தல் | கரைபோட்டுத்தடுத்தல் |
| அரிதோ | அருமையோ |
| தடங்கரை | (முன் கட்டப்பட்டிருந்த) விசாலமான கரையை |
| பேர்த்து | உடைத்து |
| விடுத்தல் | (அதனுள் அடங்கியிருந்த வெள்ளத்தைப்) புறத்திலே விடுதல் |
| அரிதோ | அருமையோ |
| விளம்பு | நீ சொல். |

(அவ்வருமைபோல)

| | |
|---|---|
| உள்ளம் | மனத்தை |
| கவர்ந்து | தன் வசமாக்கிக்கொண்டு |
| எழுந்து ஓங்கு | எழுந்து வளர்கின்ற |
| சினம் | கோபத்தை |
| காத்துக்கொள்ளும் | அடக்கிக்கொள்ளுகின்ற |
| குணமே | குணமே |
| குணமென்க | மற்றெல்லாக் குணங்களிலும் அருமையாகிய குணமாகும் என்று அறியக்கடவாய. |

தான், அசை

(க-ரை) கோபத்தை அடக்கியாளுதலே ஒருவருக்குப் பெருமையான குணமாம்.

9. மெலியோர் வலிய விரவலரை யஞ்சார்
வலியோர் தமைத்தா மருவிற்—பலியேல்
கடவு ளவிர்சடைமேல் கட்செவியஞ் சாதே
படர் சிறையப் புள்ளரசைப் பார்த்து.

| பதம். | பொருள். |
|---|---|
| பலியேல் | பிக்ஷையை ஏற்றுக்கொள்கிற |
| கடவுள் | சிவபெருமானுடைய |
| அவிர் | விளங்குகின்ற |
| சடைமேல் | சடையின்மேலிருக்குன்ற |
| கட்செவி | பாம்பானது |
| படர்சிறை | (தன்முன்வந்த அல்லது பா நத) சிறகுகளையுடைய |
| அப்புள் அரசை | அக்கருடனை |
| பார்த்து அஞ்சாது | கண்டுபயப்படாது. |

(அதுபோல)

| | |
|---|---|
| மெலியோர் | வல்லமையில்லாதவர் |
| தாம் வலியோர்தமை | தாம் அவரினும்வலியோரை |
| மருவில் | சேர்ந்தால் |
| வலிய விரவலரை | பலமுள்ள பகைவருக்கு |
| அஞ்சார் | பயப்படார். |

ஏ, அசை

(க-ரை) பகைவர் பலமுள்ளவராயின் அவரினும் பலமுள்ளவர்களைச் சேர்ந்தால் பயமில்லை.

10. தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகி
னிறையிருளை நீக்குமே னின்று.

| பதம். | பொருள். |
| --- | --- |
| திங்கள் | சந்திரன் |
| கறைஇருளை | (தனது) களங்கமாகிய இருளை |
| நீக்கக்கருதாது | நீக்குதற்கு நினையாது |
| மேல்நின்று | ஆகாயத்திலே நின்று |
| உலகில் நிறைஇருளை | உலகத்தில் நிறைந்த இருளை |
| நீக்கும் | நீக்கும். |

(அதுபோல)

| | |
| --- | --- |
| விழுமியோர் | மேலோர் அல்லது பெரியோர் |
| தம் குறைதீர்வு | தமது குறை நீக்குதலை |
| உள்ளார் | நினையார். |
| பிறர்க்கு | பிறருக்கு |
| உறும் வெம் குறை | வந்த கொடிய குறையை |
| தளர்ந்து | (மனந்) தளர்ந்து |
| தீர்க்கிற்பார் | நீக்குவர். |

(க-ரை) பெரியோர் தம் குறைகளைப் பெரிதாய் எண்ணுமல் பிறர் குறைகளைத் தீர்ப்பார்கள்.

11. பொய்ப்புலன்களைந்துநோய் புல்லியர்பா லன்றியே
மெய்ப்புலவர் தம்பால் விளையாவாம்—துப்பிற்
சுழற்றுங்கொல் கற்றூணைச் சூறா வளிபோய்ச்
சுழற்றுஞ் சிறுபுன் றுரும்பு

| பதம். | பொருள். |
|---|---|
| சூறாவளிபோய | சுழல்காற்றானது சென்று |
| துப்பின் | தனது வலிமையினாலே |
| புன்சிறுதுரும்பு | அற்பமாகிய சிறுதுரும்பை |
| சுழற்றும் | எடுத்துச் சுழற்றும். |
| கற்றூணை | கல்கம்பத்தை |
| சுழற்றுங்கொல் | சுழற்றுமா? (சுழற்றமுடியாது) |

(அதுபோல)

| | |
|---|---|
| பொய்ப்புலன்கள் ஐந்தும் | பொய்யாகிய ஐந்து புலன்களும் |
| புல்லியர்பால் அன்றி | மூடரிடத்தேயல்லாமல் |
| மெய்ப்புலவர்தம்பால் | மெய்யறிவுடைய மேலோரிடத்து |
| நோய் | துன்பத்தை |
| விளையாவாம் | செய்யாவாம். |

ஏ, ஆம் அசைகள்.

(க-ரை) ஐம்புலன்களால் மூடர் துன்பமடைவார்களேயன்றி பெரியோர் துன்பமடையார்.

12. வருந்து முயிரொன்பான் வாயி லுடம்பிற்
பொருந்துத ருனே புதுமை—திருந்திழாய்
சீதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு.

| பதம். | பொருள். |
|---|---|
| திருந்து இழாய | திருந்திய ஆபரணத்தையுடைய பெண்ணே |
| சீதநீர் | குளிர்ச்சிபொருந்திய நீரானது |
| பொள்ளல் | துவாரத்தையுடைய |
| சிறுகுடத்து | சிறியகுடத்திலே |
| நில்லாது | நில்லாமல் |
| வீதலோ | ஒழுகிப்போதலோ (ஆச்சரியம்) |
| நிற்றல் வியப்பு | நிற்றலே ஆச்சரியமாம். |
| (அதுபோல) | |
| வருந்தும் உயிர் | வருந்துகின்றஉயிரானது |
| ஒன்பான்வாயில் | ஒன்பது துளைகளையுடைய |
| உடம்பில் | சரீரத்திலே |
| பொருந்துதலே | தங்கியிருத்தலே |
| புதுமை | ஆச்சரியம் (நீங்குதல் ஆச்சரியமன்று). |

தான், அசை.

(க-ரை) ஒன்பது வாயிலையுடைய உடம்பில் உயிர் நிற்றலுக்கன்றி உயிர் நீங்குதலுக்கு ஆச்சரிய மடைதல் பேதைமையே.

13. பெருக்க மொடுசுருக்கம் பெற்றபொருட் கேற்ப
விருப்ப மொடுகொடுப்பர் மேலோர்—சுரக்கு
மலையளவு நின்றமுலை மாதே மதியின்
கலையளவு நின்ற கதிர்.

| பதம். | பொருள். |
|---|---|
| மலை அளவு நின்ற | மலையின் அளவாக நின்ற |
| சுரக்கும் முலை | பால் சுரக்கின்ற தனங்களை யுடைய |
| மாதே | பெண்ணே! |
| மதியின் | சந்திரனது |
| கதிர் | கிரணங்கள் |
| கலையளவு | (வளர்தலையும் தேய்தலையும் பொருந்திய கலைகளின் அளவாக.) |
| நின்ற | நின்றன. |
| (அதுபோல) | |
| மேலோர் | பெரியோர் |
| பெருக்கமொடு சுருக்கம் | வளர்தலையும் குறைதலையும் |
| பெற்ற | பொருந்திய |
| பொருட்கு ஏற்ப | செல்வத்திற்குப் பொருந்த |
| விருப்பமொடு | ஆசையுடன் |
| கொடுப்பர் | (இரப்பவர்க்குக்) கொடுப்பார் கள். |

(க-ரை) பெரியோர் தாம்பெற்ற செல்வத்திற்குத் தக்கபடி யாசிப்பவர்க்குக் கொடுத்துக் களிப்பர். கீழோர் அவ்வாறு செய்யார்.

14. தொலையாப் பெருஞ்செல்வத் தோற்றத்தோ மெ
தலையா யவர்செருக்குச் சார்த—லிலையா [ன்று
லிரைக்கும்வண் டூதுமல ரீர்ங்கோதாய் மேரு
வரைக்கும்வந் தன்று வளைவு

| பதம். | பொருள். |
| --- | --- |
| இரைக்கும் | ஒலிக்கின்ற |
| வண்டு ஊதும் | வண்டுகள் ஊதுகின்ற |
| மலர் | பூக்களாலாகிய |
| ஈர்ங்கோதாய் | குளிர்ந்த மாலையையுடையவளே ! |
| மேருவரைக்கும் | (எக்காலத்திலும் அசைவற்றிருந்த) மேருமலைக்கும் [து. |
| வளைவு வந்தன்று | (ஒரு காலத்தில்) வளைவுவந்த |
| | (ஆகையால்) |
| தலையாயவர் | முதன்மையாகிய அறிவையுடையவர் |
| தொலையா | (எக்காலத்திலும்) அழியாத |
| பெருஞ்செல்வம் | பெரியசெல்வத்திலே |
| தோற்றத்தோம் என்று | பிறந்திருக்கிறோம் என்று |
| செருக்கு | கர்வம் |
| சார்தல் இலை | அடைதல் இல்லை. |

ஆல், அசை.

(க-ரை) அறிவுடையோர் பெருஞ்செல்வத்துக்கும் அழிவு வருமென்று அகங்காரம் கொள்ளாமல் அடங்கியிருப்பர்.

15. இல்லானுக் கன்பிங் கிடம்பொரு ளேவன்மற்
றெல்லா மிருந்துமவற் கென்செய்பு—நல்லாய்
மொழியிலார்க் கேது முதுநூ றெரியும்
விழியிலார்க் கேது விளக்கு.

| பதம். | பொருள். |
|---|---|
| நல்லாய் | நற்குணமுடையவளே! |
| மொழியிலார்க்கு | பேசவில்லாதஊமைகளுக்கு |
| முது நூல் | பழைமையானசாஸ்திரம் |
| ஏது | என்னபயனைச்செயயும்? |
| தெரியும் விழி இலார்க்கு | பார்க்கும் கண்ணில்லாத குருடர்க்கு |
| விளக்கு ஏது | விளக்கு என்னபயனைத்தரும்? |

(அவை போல்)

| | |
|---|---|
| இங்கு | இவ்வுலகத்தில் |
| அன்பு இல்லானுக்கு | அன்பு இல்லாதவனுக்கு |
| இடம் பொருள் ஏவல் | இடம் பொருள் ஏவலுமாகிய |
| எல்லாம் இருநதும் | இவையெல்லாம்இருநதும் |
| அவனுச்கு என் செயயும் | அவனுக்கு என்ன பயனைச்செய்யும். |

மற்று, அசை.

(க-ரை) அன்பில்லாதவன் இடம், பொருள், ஏவல் எல்லாம் பெற்றிருநதும் அவை கருவியாகக்கொண்டு அறமும் புகழும் அடையமாட்டான்.

16. தம்மையுந் தங்க டலைமையும் பார்த்துயர்ந்தோர்
தம்மை மதியார் தமையடைந்தோர்—தம்மி
னிழியினுஞ் செல்வ ரிடர்தீர்ப்ப ரல்கு
கழியினுஞ்செல் லாதோ கடல்.

| பதம். | பொருள். |
|---|---|
| கடல் | பெரிய கடலானது |
| அல்கு கழியினும் | (தன்னையடுத்த) சிறிய உப்பங் கழியிலும் |
| செல்லாதோ | போய்ப் பாயாதோ (பாயும்). |
| | (அதுபோல) |
| உயர்ந்தோர் | (அறிவு) ஒழுக்கங்களினால் உயர்ந்த பெரியோர் |
| தம்மையும் | தங்களையும் |
| தங்கள் தலைமையும் | தமது முன்னேறிருப்பையும் |
| பார்த்து | கண்டு [ராகி |
| தம்மை மதியார் | தம் பெருமையை மதியாதவ |
| தமை அடைந்தோர் | தம்மை அடைந்தவர்கள் |
| தம்மின் | தம்மிலும் |
| இழியினும் | இழிந்தவராயினும் |
| செல்வர் | அவரிடத்துப்போய் |
| இடர் தீர்ப்பர் | அவர் துன்பத்தை நீக்குவர். |

(க-ரை) உயர்ந்தோர் தம்மினும் தாழ்ந்தவரிடஞ்சென்று அவர் துன்பத்தை நீக்குவர்.

17. எந்தைநல் கூர்ந்தா னிரப்பார்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ—பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்
கன்று முதவுங் கனி.

| பதம். | பொருள். |
|---|---|
| பைந்தொடீ | பசும் பொன்னாலாகிய வளை யல்களையுடையவளே |
| நின்று | (பலன் தருமுன் அழிவில்லா மல்) இருந்து |
| பயன் உதவி | பழமாகிய பயனைக் கொடுத்து |
| நில்லா | (அதனாலே பின்) நில்லாத |
| அரம்பையின் | வாழைமரத்தின் |
| கீழ்க்கன்றும் | கீழ் நிற்கின்ற அதன் கன்றும் |
| கனி உதவும் | பழத்தைக் கொடுக்கும். |

(அதுபோலவே)

| | |
|---|---|
| எந்தை | எங்கள் பிதா |
| இரப்பார்க்கு ஈந்து | யாசகர்க்குக்கொடுத்து |
| நல்கூர்ந்தான் என்று | ஏழையானான் என்று |
| அவன் மைந்தர் | அவனது புத்திரரும் |
| தம் ஈகை | தமது கொடையை |
| மறுப்பரோ | நீக்குவரோ (நீக்கார்). |

(க-ரை) பிதா தரித்திரருக்குக் கொடுத்து இளைத்தா னென்று அவன் புத்திரர் கொடையைக் கைவிடார்.

18. இன்சொலா லன்றி யிருநீர் வியனுலகம்
வன்சொலா லென்று மகிழாதே—பொன்செ
யதிர்வளையாய் பொங்கா தழற்கதிராற் றண்ணென்
கதிர்வரவாற் பொங்குங் கடல். [ன்

| பதம். | பொருள். |
|---|---|
| பொன்செய் | பொன்னாற்செய்யப்பட்ட |
| அதிர் | ஒலிக்கின்ற |
| வளையாய் | வளையல்களையுடையவளே |
| கடல் | சமுத்திரமானது |
| தண் என் கதிர் | (சந்திரனது) குளிர்ச்சிபொருந்திய கதிரின் |
| வரவால் பொங்கும் | வருகையினாலே பொங்கும் (அல்லாமல்) |
| அழல் கதிரால் | சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியன் வருகையினால் |
| பொங்காது | பொங்கமாட்டாது |

(அதுபோல்)

| | |
|---|---|
| இரு நீர் | பெரிய கடல் சூழ்ந்த |
| வியன் உலகம் | பெரிய உலகத்தவர் |
| இன் சொலால் | இனிய சொல்லினால் |
| அன்றி | அல்லாமல் |
| என்றும் | எப்பொழுதும் |
| வன் சொலால் | கடுஞ்சொல்லினால் |
| மகிழாது | மகிழ்ச்சியடையார். |

[ஏ. அசை].

(க-ரை) உலகத்தவர் இன்சொலாலன்றி கடுஞ்சொல்லினால் என்றும் மகிழார்.

19. நல்லோர் வரவா னகைமுகங்கொண் டின்புறீஇ
யல்லோர் வரவா னழுங்குவார்—வல்லோர்
திருந்துந் தளிர்காட்டித் தென்றல்வரத் தேமா
வருந்துஞ் சுழல்கால் வர.

| பதம். | பொருள். |
|---|---|
| தேமா | தித்திப்பான மாமரமானது |
| தென்றல் வர | தென்றற்காற்றுவீச |
| தளிர் காட்டி | தளிர்விட்டு |
| திருந்தும் | சிறப்புற்றிருக்கும் |
| சுழல் கால் வர | சுழற்காற்று அடிக்க |
| வருந்தும் | வருத்தமடையும். |

(அதுபோல)

| | |
|---|---|
| வல்லோர் | குணாகுணங்களை யறிய வல்லவர் |
| நல்லோர் | நல்லவருடைய |
| வரவால் | வருகையினால் |
| நகை முகங்கொண்டு | முகமலர்ச்சிகொண்டு |
| இன்பு உறீஇ | இன்பத்தையடைந்து |
| அல்லோர் | (நல்லவரல்லாத) தீயோருடைய |
| வரவான் | வருகையினால் |
| அழுங்குவார் | வருந்துவார். |

(க-ரை.) அறிவுடையோருக்கு நல்லோர் வரவால் இன்பமும் தீயோர் வரவால் துன்பமும் உண்டாகும்.

20. பெரியவர்தம் நோய்போற் பிறர்நோய்கண் டுள்ள
மெரிபி னிழுதாவ ரென்க—தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.

| பதம். | பொருள். |
|---|---|
| தெரிஇழாய | தெரிந்தெடுத்த ஆபரணத்தை யுடையவளே! |
| மண்டு | அதிகரித்த |
| பிணியால் | வியாதியினால் |
| வருந்து | வருந்தும்படியான |
| பிற உறுப்பை | மற்றை அவயவங்களை |
| கண் | கண்களானவை |
| கண்டு | பார்த்து |
| கலுழும் | அழும். |
| (அதுபோல) | |
| பெரியவர் | (அறிவொழுக்கங்களாற்) பெரியவா |
| பிறர் நோய | பிறருக்குவந்த நோயை |
| கண்டு | பார்த்து |
| தம் நோய் போல் | தமக்கு வந்த நோயைப்போல நினைத்து |
| உள்ளம் | மனமானது |
| எரியின | தீயில்பட்ட |
| இழுது ஆவர் | நெய்போல் உருகுவா |
| எனக | என்று அறியக்கடவாய. |

[ஏ. அசை.]

(க-ரை) பெரியோர் பிறர் துன்பங்கண்டு மனமுருகி வருந்துவார்கள். அவருக்குக் கருணை இயல்பான குணம்.

21. எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்து
மெழுத்தறிவார் காணி னிலையா--மெழுத்தறிவா
ராயுங் கடவு ளவிர்சடைமுன் கண்ட ளவில்
வீயுஞ் சுரநீர் மிகை.

| பதம். | பொருள். |
|---|---|
| எழுத்து அறிவார் | (ஞான) இலக்கண நூலை அறிந்தவர் |
| ஆயும் | ஆராய்கின்ற |
| கடவுள் | பரமசிவனது |
| அவிர்சடை | விளங்குகின்ற சடையை |
| முன் கண்டளவில் | தான் முன்கண்ட அளவிலே |
| சுரநீர்மிகை | ஆகாய கங்கையின் பெருக்கம் |
| வீயும் | அடங்கும். |

(அதுபோல)

| | |
|---|---|
| எழுத்தறியார் | இலக்கண நூலறியாதவருடைய |
| கல்விப் பெருக்கம் | கல்வியின் மிகுதி |
| அனைத்தும் | முழுதும் |
| எழுத்தறிவார் | இலக்கண நூல் அறிந்தோனை |
| காணின் | கண்டால் |
| இலை | அழியும் (இல்லாமற்போகும்) |

[ஆம். அசை]

(க-ரை) இலக்கணநூற் பயிற்சியில்லாதாருடைய கல்வி அதனையுடைவர் எதிரே பயன்படாது.

22. ஆக்கு மறிவா னலது பிறப்பினான்
மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க—நீக்கு
பவரா ரரவின் பருமணிகண் டென்றுங்
கவரார் கடலின் கடு.

| பதம். | பொருள். |
|---|---|
| அரவின் | (நஞ்சுள்ள) பாம்பினிடத்து உண்டாகிய |
| பருமணி | பருத்த மாணிக்கத்தை |
| கண்டு | பார்த்து |
| நீக்குபவர் ஆர் | (உயர்வாகக் கொள்ளாமல்) நீக்குவோர் யார்? (ஒருவருமில்லை). [தை |
| கடலின்கடு | (பாற்) கடலிலுண்டான நஞ் |
| என்றும் கவரார் | யாவரும் எக்காலத்திலும் எடுத்துக்கொள்ளார். |

(அதுபோல)

| | |
|---|---|
| ஆக்கும் | நற்குணங்களை உண்டாக்குகின்ற |
| அறிவான் அல்லது | அறிவினால் அல்லாமல் [ற |
| பிறப்பினால் | (உயர்ந்த) சன்மத்தினாலே |
| மீக்கொள் | மேலாகக்கொள்ளும |
| உயர்வு | உயர்வையும் |
| இழிவு | கீழாகக்கொள்ளுகின்ற இழிவையும் |
| வேண்டற்க | வேண்டாதிருக்கக்கடவீர். |

(க-ரை) அறிவு ஒழுக்கங்களாலன்றி பிறப்பினால் உயர்வு இழிவுகளை நினையாதிருக்கவேண்டும்.

23. பகர்ச்சி மடவார் பயிலநோன் பாற்ற
றிகழ்சசி தருநெஞ்சத் திட்ப—நெகிழ்ச்சி
பெறும்பூரிக் கின்றமுலைப் பேதாய் பலகா
லெறும்பூரக் கற்குழியு மே.

| பதம். | பொருள். |
|---|---|
| பூரிக்கின்ற | பருக்கின்ற |
| முலைப்பேதாய | மார்பையுடைய பேதைமைக் குணமுள்ள பெண்ணே |
| பல்கால் | பலதரம் |
| எறும்பு ஊர | எறும்புகள் ஊர்ந்து செல்ல |
| கல் குழியும | கல்லும் குழிந்துபோம். |
| (அதுபோல) | |
| மடவார் | ஒருவனுக்கு அவன் பக்கத்திலே பெண்களின் |
| பகர்ச்சி | வாயப்பேச்சோடு |
| பயில | பழகிவந்தால் |
| நோன்பு ஆற்றல் | தவஞ்செயதலினல் |
| திகழ்சசி தரும் | விளஙகுகின்ற |
| நெஞ்சத்திட்பம் | மன உறுதியானது |
| நெகிழ்ச்சி | தளர்சசியை |
| பெறும் | அடையும். |

[ஏ. அசை].

(க-ரை) மனைவியைவிட்டு நீங்கித் தனித்துச் செய்யும் தவமே உறுதியாகும்.

24. உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டு மலர்ச்
சேக்கை விரும்புஞ் செழும்பொழில்வாய் வேம்
காகமை விரும்புங் கனி. [பன்றோ

| மதம். | பொருள். |
|---|---|
| வண்டு | வண்டுகள் |
| மலர்சசேக்கை | பூவாகிய படுக்கையை |
| விரும்பும் | இச்சிக்கும். |
| செழும் | செழுமைபொருந்திய |
| பொழில்வாய | சோலையினிடத்தே |
| காக்கை | காக்கைகள் |
| விரும்பும் | இச்சிக்கின்ற |
| கனி | பழம் |
| வேம்பு அன்றோ | வேப்பம்பழம் அன்றோ |
| (அதுபோல) | |
| இங்கொருவர்க்கு | இவ்வுலகில் ஒருவருக்கு |
| குணம் உண்டு எனினும் | நற்குணம் உண்டாயிருந்தாலும் (அதை எடுத்துப்பேசாமல்) |
| கீழ்கொண்டு | கீழோர் எடுத்து |
| புகல்வது | பேசுவது |
| அவர் குற்றமே | அவருடைய குற்றங்களே. |

(க-ரை) மேலோர் வண்டைப்போல் குணத்தையே நாடிப் புகழ்வார்கள். கீழோர் குற்றமேநாடி இகழ்வார்கள்.

25. கல்லா வறிவிற் கயவர்பாற் கற்றுணர்ந்த
நல்லார் தமதுகன நண்ணுரோ—வில்லார்
கணையிற் பொலியுங் கருங்கண்ணய் நொய்தாம்
புணையிற் புகுமொண் பொருள்.

| பதம். | பொருள். |
|---|---|
| வில்லார் | வில்லோடு சேர்ந்த |
| கணையில் | அம்பைப்போல |
| பொலியும் | (புருவத்தோடு சேர்ந்து) விளங்காநின்ற |
| கருங்கண்ணய | கரிய கண்களையுடையவளே! |
| புணையில் புகும் | தெப்பத்திலே சேரும் |
| ஒண்பொருள் | கனத்த பொருள் |
| நொயதாம் | இலேசாகும். |

(அதுபோல)

| | |
|---|---|
| கல்லா | கல்லாத |
| அறிவின் | அறிவினையுடைய |
| கயவர்பால் | மூடரிடத்தே (சேரின்) |
| கற்றுணர்ந்த | கற்றறிந்த |
| நல்லார் | பெரியோர் |
| தமது கனம் | தமது பெருமையை |
| நண்ணுர் | அடையார் (இழப்பார்). |

[ஏ. ஈற்றசை].

(க-ரை) கற்ரோ மூடருடன் சேரின் தமது பெருமையை இழப்பார்கள்.

26. உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக்
கடலின் பெருமை கடவார்—மடவரால்
கண்ணளவாய் நின்றதோ காணுங் கதிரொளிதா
விண்ணளவா யிற்றோ விளம்பு. [ன்

| பதம். | பொருள். |
|---|---|
| மடவரால் | பேதைமைக்குணத்தை யுடையவளே ! |
| கதிர்காணும் | சூரிய கிரணத்துடன் பார்க்கிற |
| ஒளி | கருமணி ஒளியானது |
| கண் அளவாய | சிறிய கண்ணின் அளவாக |
| நின்றதோ | அடங்கி நின்றதோ ? |
| விண் அளவு | ஆகாயத்தின் அளவாக |
| ஆயிற்றோ | பரவி நின்றதோ ? |
| விளம்பு | நீ சொல். |
| ஒண் புலவர் | பிரகாசமாகிய புலவருடைய |
| உடலின் | சரீரத்தினது |
| சிறுமைகண்டு | சிறுமையைக்கண்டு |
| கல்விககடலின | அவரிடத்திலிருக்கிற கல்வியாகிய கடலினுடைய |
| பெருமை கடவார் | பெருமையைக்கடககமாட்டார் |

[தான் அசை]

(சிறிய கண்ணொளி ஆகாயமெங்கும் வியாபிக்கத்தக்க பெருமையை உடைததாதல்போல உருவததிறைற் சிறியவரும் அறிவினலே பெரியராயிருப்பர் என்பது தெளிபொருள் ; ஆகையால்)

(க-ரை) உடலின் சிறுமையைக்கண்டு புலவரது கல்வியை அளத்தல் கூடாது.

27. கைம்மா றுகவாமற் கற்றறிந்தோர் மெய்வருந்தித்
தமமா லியலுதவி தாஞ்செய்வர்—அம்மா
முளைக்கு மெயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதா மென்று.

| பதம். | பொருள். |
|---|---|
| முளைக்கும் | முளைக்கின்ற |
| எயிறு | பற்களானவை |
| வலியன | கடினமாகிய தின்பண்டங்களை |
| தாம் மென்று | தாம் மென்று கொடுத்து |
| முதிர்சுவை | அப்பண்டங்களினுடையநிறை வாகிய சுவை(யின்பத்தை) |
| நாவிற்கு | நாவினுக்கு |
| விளைக்கும் | உண்டாக்கும். |
| (அதுபோல) | |
| கற்று அறிநதோர் | கற்றறிநத பெரியோர் |
| கைம்மாறு | பிரதி யுபகாரத்தை |
| உகவாமல் | வேண்டாமல் |
| மெயவருநதி | சரீரப் பிரயாசைப்பட்டு |
| தம்மால் | தம்மாலே |
| இயல் உதவி | செய்யக்கூடிய உதவிகளை |
| தாம் செயவார் | (தம் கடமையென்று நினைத்து) தாங்கள் செய்வார். |

அம்மா-என்பது வியப்பிடைச்சொல்.

[வலியன கற்கண்டு, முறுக்கு, சீடை முதலிய கடின மான தின்பண்டங்கள்].

**(க-ரை)** அறிவுடையோர் பெரியோர் பிரதியுபகாரத் தை நினையாமலே பிறருக்குத் தம்மாலியன்ற உதவியைச் செய்வர்.

28. முனிவினு நல்குவர் மூதறிஞ ருள்ளக்
கனிவினு நல்கார் கயவர்—நனிவிளைவிற்
காயினு மாகுங் கதலிதா னெட்டிபழுத்
தாயினு மாமோ வறை.

| பதம். | பொருள். |
|---|---|
| கதலி | வாழையானது |
| நனிவிளைவில் | மிக முற்றுதலில்லாத |
| காயினும் ஆகும் | காயினாலும் பயன்படும் |
| எட்டி | எட்டியானது |
| பழுத்தாயினும் | பழுத்தாலும் |
| ஆமோ | பயன்படுமோ |
| அறை | நீ சொல்வாயாக. |
| (அவைபோல) | |
| மூதறிஞர் | பேரறிவுடையவர் |
| முனிவினும் | (தமக்குக்) கோபம் உண்டாயிருககிற காலத்திலும் |
| நல்குவர் | கொடுப்பார். |
| கயவர் | மூடர் |
| உள்ளக்கனிவினும் | தமக்கு மனமகிழ்சசி யுண்டாயிருக்கிற காலத்திலும் |
| நல்கார் | கொடார். |

தான்-அசை (வாழையானது பழத்திலைன்றிக் காயினாலும் பயன்படுதல்போல அறிவினர் மகிழ்ச்சியினாலன்றிக் கோபத்தினாலும் உபகரிப்பார். எட்டியானது காயினாலன்றிப் பழத்தினாலும் பயன்படாமைபோல மூடர் கோபத்தினாலன்றி மகிழ்சசியினாலும் உபகரியார் என்பது தெளிபொருள்).

(க-ரை) பெரியோர் கோபத்திலும் கொடுப்பர். மூடர் மகிச்ழ்சியினுங் கொடார்.

29. உடற்கு வருமிடர்நெஞ் சோங்குபரத் துற்றோர்
அடுக்கு மொருகோடி யாக—நடுக்கமுறார்
பண்ணிற் புகலும் பனிமொழியா யஞ்சுமோ
மண்ணிற் புலியைமதி மான்.

| பதம். | பொருள். |
|---|---|
| பண்ணில் | இராகம்போல |
| புகலும் | (மதுரமாகப்) பேசுகின்ற |
| பனி | குளிர்ச்சிபொருந்திய |
| மொழியாய | சொல்லையுடையவளே |
| மண்ணில் | பூமியினமேலிருக்கின்ற |
| புலியை | புலிதனைப்பார்த்து |
| மதி | சந்திரனிடத்திலிருக்கின்ற |
| மான் | மானனது |
| அஞ்சுமோ | பயப்படுமோ (பயப்படமாட்டாது) |

(அதுபோல)

| | |
|---|---|
| ஓங்கு பரத்து | உயர்ந்த பிரமத்திலே |
| நெஞ்சு உற்றோர் | மனம்பொருந்திய ஞானிகள் |
| உடற்கு வரும் | சரீரத்தைப்பற்றிவருகிற |
| இடர் | துன்பங்கள் |
| அடுக்கும் | அடுக்கிச் சொல்லப்பபட்ட |
| ஒரு கோடி ஆக | ஒரு கோடி அளவினவாக இருந்தாலும் |
| நடுக்கம் உறார் | பயந்து நடுக்கம் அடையமாட்டார். |

(க-ரை) பரம்பொருளினிடத்தே மனமழுந்தினவர் எவ்வாறான பெருந்துன்பங்களுக்கும் பயப்படார்.

30. கொள்ளுங் கொடுங்கூற்றங் கொல்வான் குறுகுதன்
னுள்ளங் கனிந்தறஞ்செய் துய்கவே—வெள்ளம்[மு
வருவதற்கு முன்ன ரணைகோலி வையார்
பெருகுதற்க ணென்செய்வார் பேசு.

| பதம். | பொருள். |
|---|---|
| வெள்ளம் | வெள்ளமானது |
| வருவதற்கு முன்னர் | வருதற்கு முன்னே |
| அணைகோலி | கரை கட்டி |
| வையாா | வையாதவா |
| பெருகுதற்கண் | (அது) பெருகிவரும்போதில் |
| என்செயவார் | என்ன செயவாாகள் |
| பேசு | நீ சொல். |

(ஆதலால்)

| | |
|---|---|
| கொள்ளும் | உயிரைப் பிடித்துப்போகின்ற |
| கொடுங் கூற்றம் | கொடிய இயமன் |
| கொல்வான் | கொல்லும்படி |
| குறுகுதன்முன் | நெருங்கிவருதற்குமுன்னே |
| உள்ளங்கனிந்து | மனமகிழ்ந்து |
| அறஞ்செய்து | தருமங்களைச்செய்து |
| உய்க | (அவனுக்குத் தப்பிப்) பிழை யுங்கள். |

[ஏ. ஈற்றசை].

க-ளா) மரணம் வருமுன் தருமம் செய்தல்வேண்டும்.

31. பேரறிஞர் தாக்கும் பிறர்துயரந் தாங்கியே
வீரமொடு காக்க விரைகுவார்—நேரிழாய்
மெய்சென்று தாக்கும் வியன்கோ லடிதன்மேற்
கைசென்று தாங்குங் கடிது.

| பதம். | பொருள். |
|---|---|
| நேர் | தகுதியாகிய |
| இழாய் | ஆபரணங்களையுடையவளே |
| மெய்சென்று தாக்கும் | உடம்பிற்போய்ப் படுகின்ற |
| வியன்கோல் அடி | பெரியகோலினுடைய அடியை |
| கை | கையானது |
| கடிது சென்று | சீக்கிரமாகப் போய் |
| தன்மேல் | தன்மேல் படும்படி |
| தாங்கும் | ஏற்றுக்கொள்ளும். |
| (அதுபோல) | |
| பேர் அறிஞர் | பெரிய அறிவையுடையவர் |
| தாக்கும் | வருத்துகின்ற |
| பிறர் துயரம் | பிறருடைய துன்பத்தை |
| வீரமொடு | வீரத்தோடு |
| தாங்கி | (தாம்) ஏற்றுக்கொண்டு |
| காக்க | (அவரைக்) காப்பதற்கு |
| விரைகுவார் | சீச்கிரமாகப்போவார். |

[ஏ. அசை]

(க-ரை) பெரியோர் பிறர் துன்பத்தை விரைந்து நீக்குவர்.

32. பன்னும் பனுவற் பயன்றே ரறிவிலார்
மன்னு மறங்கள் வலியிலவே—நன்னுதால்
காழொன் றுயர்திண் கதவு வலியுடைத்தோ
தாழொன் றிலதாயிற் றான்.

| பதம். | பொருள். |
|---|---|
| நன்னுதால் | நல்ல நெற்றியையுடையவளே |
| காழ் | வயிரத்தையும் |
| உயர் திண் | உயர்வையும் வலிமையையும் |
| ஒன்று கதவு | பொருந்திய கதவானது |
| தாழ் ஒன்று | ஒரு தாழ் |
| இலது ஆயின் | இல்லாதாயின் |
| வலி | (தான்) உறுதியை |
| உடைத்தோ | உடைத்தாமோ (ஆகாது.) |

(அதுபோல)

| | |
|---|---|
| பன்னும் | சொல்லப்படுகின்ற |
| பனுவல் பயன் | நூல்களின் பொருளை |
| தேர் அறிவு இலார் | ஆராயும் அறிவு இல்லாதவரது |
| மன்னும் | மிகுந்த |
| அறங்கள் | தருமங்களும் |
| வலியிலவே | உறுதியில்லாதனவேயாம். |

[தான் - அசை].

(க-ரை) விதிவிலக்குகளைப் பகுத்தறியும் அறிவு இல்லாதவர் செய்யும் தருமங்கள் பயன்படா.

33. எள்ளா திருப்ப விழிஞர்போற் றற்குரியர்
விள்ளா வறிஞரது வேண்டாரே-தள்ளாக்
கரைகாப் புளதுநீர் கட்டுகுள மன்றிக்
கரைகாப் புளதோ கடல்.

| பதம். | பொருள். |
| --- | --- |
| நீர்கட்டுகுளம் | நீரைக் கட்டிவைத்திருக்கும் சிறு குளமே |
| தள்ளாக்கரை | தள்ளப்படாத கரையாகிய |
| காப்புளது அன்றி | காவலையுடையது அல்லாமல் |
| கடல் | (பெரிய) சமுத்திரமானது |
| காப்பு உளதோ | காவலையுடையதோ (உடையது அன்று). |
| | (அவைபோல) |
| இழிஞர் | (அறிவில்லாத) கீழோர் |
| எள்ளாதிருப்ப | தம்மைப் பிறர் இகழாதிருக்கும்படி |
| போற்றற்கு உரியர் | காக்கப்படுதற்கு உரியராவார். |
| விள்ளா | வேறுபடாத |
| அறிஞர் | அறிவையுடைய பெரியோர் |
| அது வேண்டார் | அதை விரும்பார். |

[ஏ - ஈற்றசை].

(க-ரை) பிறர் இகழாவண்ணம் காக்கப்படுதல் கீழோர்க்கேயன்றி மேலோர்க்கு வேண்டுவதில்லை.

34. அறிவுடையா ரன்றி யதுபெறார் தமபாற்
செறிபழியை யஞ்சார் சிறிதும—பிறைநுதால்
வண்ணஞ் செய் வாள்விழியே யன்றி மறைகுருட்
கண்ணஞ்சு மோவிருளைக் கண்டு. [டுக்

| பதம். | பொருள். |
|---|---|
| பிறை | பிறைக்கு ஒப்பாகிய |
| நுதால் | நெற்றியையுடையவளே ' |
| இருளைக்கண்டு | இருட்டைக்கண்டு |
| வண்ணஞ் செய் | அழகுசெய்கின்ற |
| வாள் | ஒளி பொருந்திய |
| விழியே அன்றி | கண்களே யல்லாமல் |
| மறை | ஒளிமறைந்த |
| குருத்டுக்கண் | குருட்டுக் கண்கள் |
| அஞ்சுமோ | பயப்படுமோ (பயப்படா) |

(அவைபோல)

| | |
|---|---|
| அறிவு உடையார் அன்றி | அறிவுடையவரோ யல்லாமல் |
| அது பெறா்ர் | அவ்வறிவைப் பெறாத மூடர் |
| தம்பால் | தம்மிடத்து |
| செறிபழியை | வரும் பழிக்கு |
| சிறிதும் அஞ்சார் | சிறுதும் பயப்படார். |

(கருத்து) பழிக்கு அறிவுடையோர் பயப்படுவர். மூடர் பயப்படார்.

35. கற்ற வறிவினரைக் காமுறுவர் மேன்மக்கண்
மற்றையர்தா மென்று மதியாரே—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய் வேண்டா புளிங்
பால் வேண்டும் வாழைப் பழம். [காடி

| பதம். | பொருள். |
|---|---|
| வெற்றி | வெற்றியையுடைய |
| நெடும்வேல் | நீண்ட வேலானது |
| வேண்டும் | விரும்புகின்ற |
| வாள் விழியாய் | ஒளி பொருந்திய கண்களை யுடையவளே |
| வாழைப்பழம் | வாழைப்பழத்தை |
| பால் வேண்டும் | (தித்திப்பாகிய) பாலானது தனக்குத்தகுதியாகவேண்டும். |
| புளிஙகாடி | புளித்த காடி நீரானது |
| வேண்டா | அப்பழத்தை வேண்டாவாம். |

(அவைபோல)

| | |
|---|---|
| கற்ற அறிவினரை | பல (நூல்களையும்) கற்ற அறிவையுடையவரை |
| மேன் மக்கள் | மேலோர் |
| காமுறுவர் | விரும்புவர் |
| மற்றையர் | மூடர் |
| என்றும் மதியார் | எக்காலத்தும் (அவரை) மதியார். |

[தாம், ஏ - அசைகள்].

(க-ரை) கல்வியறிவுடையவரை மேலோர் விரும்புவார்கள்; கீழோர் விரும்பார்.

36. தக்கார்க்கே யீவர் தகார்க்களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலு
நெல்லுக் கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய்.

| பதம். | பொருள். |
|---|---|
| எக்காலும் நீர் | எப்பொழுதும் நீரை |
| நெல்லுக்கு | நெல்லுக்கு |
| இறைப்பதே | இறைப்பதே |
| அன்றி | அல்லாமல் |
| காட்டு | காட்டிலிருக்கிற |
| முளி புல்லுக்கு | உலர்ந்து போகிற புல்லுக்கு |
| போய | போய் |
| இறைப்பரோ | இறைப்பார்களோ. (இறையார்) |

(அதுபோல)

| | |
|---|---|
| தக்கார்க்கே | யோக்கியருக்கே |
| ஈவர் | கொடுப்பர் |
| தகார்க்கு | தகுதியில்லாத அயோக்கியருக்கு |
| அளிப்பார் | கொடுப்பவர் |
| இல்லென்று | இல்லையென்று (அறிந்து) |
| விழுமியோர் | மேலோர் |
| மிக்கார்க்கு | தீமையின் மிகுந்தோர்க்கு |
| உதவார் | (பொருளைக்) கொடார். |

(க-ரை) மேலோர் யோக்கியர்களுக்குக் கொடுப்பார்களல்லது அயோக்கியருக்குக் கொடார். (பாத்திரமறிந்து பிச்சையிடு என்ற உலக வசனத்தையுங் காண்க).

37\. பெரியோர் முற்றன்னைப் புனைந்துரைத்த பேதை
தரியா துயர்வகன்று தாழும்—தெரியாய் கொல்
பொன்னுயர்வு தீர்த்த புணர்முலையாய் விந்தமலை
தன்னுயர்வு தீர்ந்தன்று தாழ்ந்து.

| பதம். | பொருள். |
|---|---|
| பொன உயர்வு | திருமகள் அல்லது இலக்ஷ்மியினுடைய உயர்வை |
| தீர்த்த | (அழகினாலே) நீக்கிய |
| புணர் முலையாய் | நெருங்கிய மார்பையுடையவளே |
| விந்தமலை | விந்தியமலையானது |
| தாழ்ந்து | (அகஸ்திய முனிவர் கையாலழுத்தத்) பாதாளத்திலே அழுந்தி |
| தன் உயர்வு | தன் பெருமையை |
| தீர்ந்தன்று | இழந்தது. |
| தெரியாய் கொல் | (நீயதை) அறியாயோ? |

(அதுபோல)

| | |
|---|---|
| பெரியார்முன் | பெரியவர்முன் |
| தன்னை | தன்னை |
| புனைந்துரைத்த | சிறப்பித்துச்சொல்லிக்கொண்ட |
| பேதை | மூடன் |
| உயர்வுதரியாது | உயர்வைப் பெறாமல் |
| அகன்று | நீங்கி |
| தாழும் | தாழ்ந்துவிடுவான். |

(க-ரை) பெரியோர் முன் தன்னைப் புகழ்ந்துரைத்த தாழ்ச்சியடைவான்.

38. நல்லார் செயுங்கேண்மை நாடோறு நன்றாகு .[ள்
மல்லார் செயுங்கேண்மை யாகாதே—நல்லாய்கே
காய்முற்றிற் றின்றீங் கனியா மிளந்தளிர்நாள்
போய்முற்றி னென்னாகிப் போம.

| பதம். | பொருள். |
| --- | --- |
| நல்லாய் கேள | நற்குணத்தையுடையவனே கேள் |
| காய் முற்றில் | (நாள்சென்று) காயானது முற் |
| தின் | தின்னுதற்கு [றினால் |
| தீங்கனியாம் | மதுரமாகிய பழமாகும். |
| இளந்தளிர் | இளமையான தளிரானது |
| நாள்போய் முற்றின் | நாள்சென்று முற்றினால் |
| என்னாகிப்போம் | யாதாகிப்போகும். |

(அதுபோல)

| | |
| --- | --- |
| நல்லார்செயும் | நல்லோர் செய்கிற |
| கேண்மை | சிநேகம் |
| நாள்தோறும் | தினந்தோறும் |
| நன்றாகும் | நன்றாகி வளரும். |
| அல்லார் செயும் | மூடர் செய்யும் |
| கேண்மை | சிநேகமானது [காது. |
| ஆகாது | (நாள்சென்றால் நல்லது) ஆ |

[ஏ - அசை].

**(க-ரை)** நல்லோர் சிநேகம் நாளுக்குநாள் இனிதாகும்; தீயோர் சிநேகம் அவ்வாறாகாது கெடும்.

39. கற்றறியார் செய்யுங் கடிநட்புந் தாங்கூடி
யுற்றுழியுந் தீமைநிகழ் வுள்ளதே—பொற்றொடீஇ
சென்று படர்ந்த செழுங்கொடிமென் பூமலர்ந்த
வன்றே மணமுடைய தாம்.

| பதம். | பொருள். |
| --- | --- |
| பொன் தொடீஇ | பொன்னாலாகிய வளையல்களை யுடையவளே |
| சென்று படர்ந்த | சென்றுபரவிய |
| செழுங்கொடி | செழிப்பாகிய கொடியினுடைய |
| மென்பூ | மிருதுவான பூவானது |
| மலர்ந்த அன்றே | மலர்ந்த அன்றைக்கு மாத்திரமே |
| மணமுடையதாம் | வாசனையை யுடைத்தாகும். (மறுநாள் அந்த மணங்கெடும்.) |

(அதுபோல)

| | |
| --- | --- |
| கற்று அறியார் | கல்லாத மூடர் |
| தாம் செயயும் | ஒருவரோடொருவர் செய்கிற |
| கடி நட்பும் | மிகுதியாகிய சிநேகமும் |
| கூடி உற்றுழியும் | நெடுங்காலங் கூடியிருந்த இடத்தும் |
| தீமை நிகழ்வு | பொல்லாங்கு விளைதல் |
| உள்ளது | உள்ளதாகும். |

[ஏ - அசை]

**(க-ரை)** மூடர் சிநேகம் ஆரம்பத்திலே நன்றாயிருந்தாலும் பூவின் மணம் மறுநாள் கெடுதல்போல உடனே குணங்கெட்டுப்போம்.

40. பொன்னணியும் வேந்தர் புனையாப் பெருங்கல்வி
மன்னு மறிஞரைத் தாமற்றொவ்வார்—மின்னுமணி
பூணும் பிறவுறுப்புப் பொன்னே யதுபுனையாக்
காணுங்கண் ணொக்குமோ காண்.

| பதம். | பொருள். |
|---|---|
| பொன்னே | இலட்சுமிக்குச் சமானமானவளே! |
| மின்னும் அணி | பிரகாசிக்கின்றஆபரணத்தை |
| பூணும் | அணிந்துகொள்ளுகிற |
| பிற உறுப்பு | கைகால் முதலாகிய அவயவங்களானவை |
| அது புனையா | அவ்வாபரணத்தை அணியாத |
| காணும் கண் | பார்க்கின்ற கண்களுக்கு |
| ஒக்குமோ | ஒப்பாகுமோ? (ஒப்பாகா). |

(அதுபோல)

| | |
|---|---|
| பொன் அணியும் | பொன்னாலாகிய ஆபரணத்தை |
| வேந்தர் | அரசர்கள் |
| புனையா | அதனையணியாத |
| பெருங்கல்வி மன்னும் | மிககல்விப்பொருள் நிலைபெற்ற |
| அறிஞரை | விவேகிகளுககு |
| ஒவ்வார் | ஒப்பாகார். |

[தாம். மற்று — அசைகள். காண் முன்னிலையசை].

(க-ரை) அறிவுடையோருக்கு அரசரும் ஒவ்வார்.

**நன்னெறியுரை முற்றிற்று.**

---